### III.—GENERAL DISCUSSIONS ON DEMAND FOR FURTHER GRANTS DURING THE YEAR 1961–1962.

DEPUTY SPEAKER : Now we shall take up **Demands for** Further Grants during the year 1961–62.

**SRI S. M. ANNAMALAI :** சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, 1961-62-ம் ஆண்டுக்கு இரண்டாவது உப-மான்யக் கோரிக்கை சட்டமன்றத்தின் முன்னால் வைக்கப்பட்டிருக்கிறது. அது ஏறத்தாழ 21 கோடிக்கு அதிகமாக இருக்கிறது. இது மிக மிக அதிகம் என்று சொன்னால் அமைச்சர் அவர்கள் சொல்லுவார்கள், திட்டங்களை நிறைவேற்றுகிறபோது இது அதிகம் இல்லை என்று. ஆனால், அவர்கள் சொல்லியிருக்கக்கூடிய குறிப்பில்,

" The Plan for 1961–62 which was of the order of Rs. 47.87 crores in the Budget Estimates has been stepped up to Rs. 50.60 crores in the Revised Estimates. The non-plan development expenditure on committed schemes and others has also increased than originally anticipated " என்று சொல்லியிருக்கிறார்.

(Srimathi T. N. Anandanayaki in the Chair.)

மூன்று கோடி ரூபாய் என்று திட்டமிட்டோமே அது நடைமுறை யிலே வரும்போது அதிகமாகி விட்டது என்று அமைச்சர் குறிப் பிட்டிருப்பது உண்மையிலேயே மிக மிக வருந்தத்தக்க விஷயம். காரணம் என்ன என்று கேட்டால் திட்டமிடுகிறபோது திட்டங்கள் நிறைவேற இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் ஆகின்றன. முதலில் ஒரு திட்டம் போடுகிறார்கள். ஆறு மாதம் கழித்து மாற்றி அமைக்கிறார்கள். மறுபடியும் ஒரு ஆண்டு கழித்து மாற்றி அமைக்கிறார்கள். இப்படி மாற்றி அமைப்பதன் காரணமாக, நிர்வாகத்திலே ஏற்படுகிற தாமதம் காரணமாக, திட்டமிட்டது சுமார் 40 கோடி என்றால் நடைமுறையில் கொண்டு வரும்போது 3 கோடி ரூபாய் அதிகமாக காலதாமதம் காரணமாகத்தான் ஆகின்றது.

இதைத்தான் நான் அஷ்ஷுரன்ஸ் கமிட்டி மூலமாக அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். என்னுடைய தொகுதியைப் பொறுத்த வரையில், அதாவது 10-வது அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தொகு தியாகிய துரிஞ்சாபுரத்தில் ஒரு சிறிய கிணறு வெட்ட வேண்டு மென்று திட்டமிடப்பட்டது. அதைப்பற்றி நான் இந்தச் சபை யிலேகூட ஒரு கேள்வி எழுப்பினேன். 59-வது ஆண்டிலே இதற்கு ரூ. 3,500 செலவழிப்பது என்று ஒரு திட்டம் போடப்பட்டது. பிறகு இரண்டாவதாக ஒரு திட்டம் போட்டார்கள். அப்போது அது 4,500 ரூபாயாகப் போடப்பட்டது. மூன்றாவதாக, ஒரு திட்டம் போட்டார்கள். அப்போது அது 5,500 ரூபாயாக ஆயிற்று. பின்னால் நான்காவதாக ஒரு திட்டம் போட்டார்கள். அதற்கு 8,400 ரூபாய் என்று திட்டம் போட்டார்கள். இப்படி திட்டம் போட்டு, அந்தக் கிணறு இன்னும் கட்டி முடியாமல் குறையாக இருக்கிறது. இதைப் பார்க்கின்றபோது, ஒரு சிறு கிணறு

[Sri S. M. Annamalai] [14th December 1961

வெட்டுவதற்கு 59-ல் திட்டம்போட்டு, 61-ம் ஆண்டிலே அதாவது 2, 3 ஆண்டுகள் கழித்து அந்தத் திட்டம் அமுலுக்கு கொண்டுவரப் படும்போது, அதிகப்படியான பணத்தை செலவழிக்கக்கூடிய ஒரு நிலைமையைத்தான் பார்க்கின்றோம். காரணம், காலதாமதமே யாகும். இதேபோல்தான் எந்தத் திட்டங்களையும் நிறைவேற்று வதற்கு அதிகப்படியாக செலவழிக்க வேண்டியிருக்கிறது. அதைப் போலவே, அஷ்ஷூரன்ஸ் கமிட்டி சார்பிலே சமர்ப்பிக்கப்பட்ட 10-வது அறிக்கையிலே 7-வது பாராவிலுள்ள ஒரு விஷயத்தை இந்த சட்டமன்றத்திலே படித்துக்காட்ட விரும்புகிறேன்:—

"On 3rd March 1959, the Minister for Works answered that the feasibility of forming a small reservoir across Vaippar to catch flash floods was being examined. In March, 1961, the Department have stated that the Chief Engineer's (Irrigation's) final report was awaited. The Committee regrets to note that though two full years have lapsed the assurance still remains unimplemented."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. சாதாரணமாக அமைச்சர்கள் வாக்குறுதி கொடுப்பதே கடினம். அதிலும் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் மிகவும் சாமர்த்தியமாக பதில் சொல்லி விடுவார்கள். மற்ற அமைச்சர்கள் ஓரிரண்டு வாகுக்குறுதிகள் கொடுப்பார்கள். ஆனால், அப்படி கொடுக்கப்படும் வாக்குறுதிகள் கூட சரியாக நிறைவேற்றப்படுவதில்லை. வாக்குறுதி கொடுத்த இரண்டு மாதங்களுக்குள் நிறைவேற்றினால் நல்லது. ஆனால், இரண்டு மாதங்களுக்குள் நிறைவேற்றினால் நல்லது. ஆனால், 2 மாதங்களுக்குப் பதிலாக 2 ஆண்டுகள், 3 ஆண்டுகள் என்றாகிறது. தினால், இந்தத் திட்டங்களில் முதன் முதலில் போடுகின்ற திட்டத் திற்கும், பின்னாலே வருகின்ற திட்டத்திற்கும் அதிக அளவிலே பணத்தை செலவழிக்க வேண்டியிருக்கிறது. அந்தக் காரணத்தி னாலேதான், முதலிலே 47 கோடி ரூபாய் என்றிருந்தது, இப்போது 50 கோடிக்கும் சற்று அதிக அளவுக்கு உயர்ந்திருக்கிறது. ஆகவே, இந்த காலதாமதம் ஏற்படுவதன் மூலமாக இப்படி 3 கோடி ரூபாய் அதிகரிக்கப்பட்டிருக்கிறது. இதை உண்மையிலேயே அமைச்சர் அவர்கள் கவனித்து, சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு மதிப்பு கொடுக்காமல் இருந்தாலும், ஒரு கமிட்டி சொல்லக் கூடிய கருத்தை ஏற்று, இந்த நேரத்தில் எல்லா இலாகாக்களுக்கும் உத்திரவு பிறப்பித்து, எவ்வளவு சீக்கிரத்தில் ஒரு திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் திட்டத்தை நிறைவேற்றும்படி ஒரு கடுமையான உத்திரவை பிறப்பிக்க வேண்டுமென்று மிகவும் தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன். காரணம், என்னால் இதைப்போல் பல நிகழ்ச்சிகள் சொல்ல முடியும். நான் ஏறத்தாழ மூன்று ஆண்டு காலத்திற்கு மேல் அஷ் ஷூரன்ஸ் கமிட்டியில் இருக்கின்ற காரணத்தினால் பல நிகழ்ச்சிகளை எடுத்துச் சொல்ல முடியும். ஒரு சிறு கிணறு கட்டுவதற்கு என்றால்கூட, ஒரு பள்ளிக்கூடம் கட்டுவதற்கு என்று சொன்னால் கூட, அதை திட்டமிடுவதற்கு ஏறத்தாழ 2, 3 ஆண்டுகளுக்கு மேலாகிவிடுகிறது. இப்படி ஒரு சிறு கிணறு கட்டுவதற்குகூட

14th December 1961] [Sri S. M. Annamalai]

மூன்ருண்டு காலத்திற்கு மேலாகிறது என் றுசொன்னுல், அது மிக மிக வருந்தத்தக்க விஷயமாகும். அதனுலேதான் இப்படி 3 கோடி ரூபாய்க்கு அதிகமாக கொடுக்கக்கூடிய ஒரு நிலைமை எற்பட்டிருக் கிறது என்பதை மிகவும் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து, இந்தக் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்திற்காக ரூ. 9 லட்சம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்ற திட்டங்களைவிட இதற்கு இவ்வளவு அவசரம் ஏன்? நம்முடைய அரசாங்கம் இதை ஏன் இவ்வளவு அவசரமாக புகுத்துகிருர்கள் என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. வருகின்ற வரவு செலவுத் திட்டம் வரும் போது, இந்தத் துறைக்கு பணத்தை ஒதுக்காமல், இப்படி ஒரு உபமானிய கோரிக்கையில் அவசர அவசரமாக நிறைவேற்றப்பட வேண்டிய அவசியம்தான் என்ன? முக்கியமான சில திட்டங்களை மட்டும் இந்த உப மானியத்திலே கொண்டு வந்தால் என்ன? அதைவிடுத்து, இந்த குடும்பக் கட்டுப்பாடு திட்டத்திற்கு மட்டும் 9 லட்சம் ரூபாயை ஒதுக்கியிருக்கிருர்கள். இதற்கு இவ்வளவு அவசரப்பட வேண்டிய தேவையில்லை. ஆகவே, இதைக்கூட இந்த உபமானியக் கோரிக்கையிலே சேர்க்காமல், பட்ஜட் வரும் போது சேர்த்திருக்கலாம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அடுத்து நான் சொல்ல இருப்பது, ஒரு சில புதுத் திட்டங்களை மட்டும் இந்த சப்ளிமெண்டரி அறிக்கையில் சேர்த்தால் போதுமென்று முன்பே பலமுறை நான் வற்புறுத்திச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். அப்படிச் செய்யாமல், சில சாதாரண திட்டங்களைக்கூட இந்த உப மானியக் கோரிக்கையில் சேர்த்திருப்பது அவ்வளவு உகந்ததல்ல என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதே போல், இதை முதலாவது உப மானியக் கோரிக்கையிலேயாவது சேர்த்துப் போட்டிருக்கலாம். அப்படியும் இல்லாமல், இதை இரண்டாவதாக கொண்டு வந்திருக் கக்கூடியதில் சேர்த்திருக்கவேண்டிய அவசியமில்லை. உதாரணத் திற்கு ஒன்றிரண்டு சொல்ல ஆசைப்படுகிறேன்.

" According to section 86 of the States Reorganisation Act, 1956, read with the Schedule V of that Act, the political pensions payable to the Rulers of former Travancore and Cochin States, their relatives and servants have to be apportioned between Government of Kerala and Madras in the population ratio. This Government have therefore to pay to the Government of Kerala a sum of Rs. 7,47,255 for the period 1st November 1956 to 28th February 1961, towards the political pensions."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது 1961-ம் ஆண்டிலே பெப்ரவரி மாதத்திலே முடிவு செய்யப்பட்டது. அப்படி முடிவு செய்யப் பட்டு, பிறகு ஆகஸ்ட் மாத உபமானியக் கோரிக்கையிலே சேர்க்கப் பட்டுள்ளது. ஏன் இவ்வளவு காலதாமதம் செய்து, இதிலே சேர்க் கப்பட்டிருக்கிறது என்பதை என்னுல் புரிந்து கொள்ள முடிய வில்லை. அதைப்போலவே இன்னெரு திட்டம்கூட இருக்கிறது.

" As the scheme was sanctioned late in the year 1960-61 no provision could be made in the budget for 1961-62. The provision under this head is based on the trend of actuals."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது மனித சக்தியை (மான்பவர்) உபயோகித்து ஒரு திட்டத்தை ஆரம்பிப்பதற்காக 3,06,000 ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதை 1961-62-ம் ஆண்டிலே உள்ள பட்ஜெட்டிலே சேர்க்க முடியாமல் போனாலும்கூட, 1961-62-ம் ஆண்டின் உபமானியக் கோரிக்கையிலாவது சேர்த்திருக்கலாம். அதையாவது முதல் அறிக்கையிலேயே சேர்த்திருக்கலாம். அதையும் தவிர்த்து, இரண்டாவது அறிக்கையிலே இதைச் சேர்த்திருப்பது அவ்வளவு முறையல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதைப்போலவே, தேர்தலுக்காக வேண்டி போலீஸ் பந்தோபஸ்துக்காக பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு வரவு-செலவுத் திட்டத்திலேயும் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்போது கொண்டு வரப்பட்டுள்ள இன்டரிம் பட்ஜட்டிலேயும் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதைத் தவிர, சப்ளிமெண்டரி எஸ்டிமேட்டிலும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்படி செய்திருப்பதும் முறையல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதையெல்லாம் வருங்காலத்திலே வரக்கூடியவர்கள் செய்து கொள்ளலாம். தவிர, இதற்கு 21 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் அதிகமாகும். இதைக் கூடுமானவரையில் குறைக்கவேண்டும். இதற்கான நடவடிக்கைகளை கனம் அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ளவேண்டும். இப்போதுள்ள அமைச்சர் அவர்கள் இந்த மாகாணத்தைவிட்டுப் போவதாக இருந்தாலும், அடுத்து வருகின்றவர்கள் இதைக் கவனித்து செய்ய வேண்டும். இப்படி பட்ஜட் எஸ்டிமேட் 3 கோடி ரூபாய் அதிகமாவதற்கு இடமளிக்கக் கூடாது. செய்யக்கூடிய காரியங்களை குறித்த காலத்திற்குள் செய்யவேண்டும். குறைந்தது 6 மாதங்களுக்கு மேல் காலதாமதமாகக் கூடாது. இப்படி 2, 3 ஆண்டுகள் என்று காலதாமதமாவது முறையல்ல. ஆகவே இவைகளிலே எல்லாம் கவனம் செலுத்தி, தகுந்த நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**SRI M. A. MUTHIAH CHETTIAR :** கனம் சபைத் தலைவர் அவர்களே, இந்த பட்ஜெட் பேச்சிலே நான் கலந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்டதற்குக் காரணம், நம்முடைய நிதி மந்திரி அவர்கள் இப்போது இங்கிருந்து செல்லுகின்றபோது, அவரைப் பாராட்டுவதற்காகத்தான். ஜில்லா கலெக்டர் ஆபீஸ், டிஸ்டிரிக்ட் அட்மினிஸ்ட்ரேஷன் ஆகியவைகளில் அபிவிருத்தி செய்யவேண்டுமென்று பல தடவைகளில் இந்த மன்றத்தில் என்னுடைய அபிப்பிராயத்தை தெரிவித்திருக்கின்றேன். இப்போது ஜில்லாக்களிலே எல்லாம் டிஸ்டிரிக்ட் ரெவின்யூ ஆபீசர்களைப் போட்டிருக்கிறார்கள். ஆனால் நான் ஜில்லாவையே பிரிக்க வேண்டுமென்று பல தடவைகள் இங்கு பேசியிருக்கிறேன். இப்படி நான் சொல்லி 5, 6 வருஷங்களுக்கு மேலாகி விட்டது. முக்கியமாக, இப்போது புதுக்கோட்டை சேர்ந்த பிறகு, புதுக்கோட்டையையும், ராமநாதபுரத்தையும் சேர்த்து ஒரு ஜில்லாவாக ஆக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். அந்தக் காலத்திலே இருந்து சொல்லிக்கொண்டுவருகிறேன். இப்போது,

14th December 1961] [Sri M. A. Muthiah Chettiar]

காரைக்குடி, தேவகோட்டை, செட்டிநாடு ஆகியவைகளையெல்லாம் ஒன்று சேர்த்து, அதற்கு புதுக்கோட்டையிலே ஒரு ஹெட்குவார்ட்டர்ஸை வைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லியிருக்கிறேன். இதை நன்றாக யோசித்துப் பாருங்கள். முன்பு புதுக்கோட்டை என்று ஒரு தனி ஸ்டேட்டாகவே அது இருந்தது. அங்கு இப்போதும் எல்லாவித வசதிகளும் இருக்கிறது. அதை நாம் உபயோகப்படுத்திக் கொள்ளாமல், அது வீணாகி வருகிறது. இதை உபயோகித்து இங்கு ஒரு ஜில்லா ஹெட்குவார்ட்டர்ஸை ஏற்படுத்துங்கள் என்று பல தடவை சொல்லியிருக்கிறேன். இப்போது அவர்களும் சொன்னார்கள். இருந்தாலும், அவர்கள் சொல்லியதற்காக நான் எனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். அது மட்டுமல்ல. மேலும் முயற்சி எடுத்துக் கொண்டு, எல்லா ஜில்லாக்களையும் பிரிப்பார்கள் என்று நினைக்கிறேன். ஜில்லாக்களை பிரித்தால்தான் கம்யூனிட்டி டெவலப்மெண்டு, ரூரல் டெவலப்மெண்டு ஸ்கீம்களெல்லாம் செவ்வனே நடப்பதற்கு வசதியாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கலெக்டர்களுக்கு இப்பொழுது வேலை அதிகமாகி விட்டது. ஜில்லாக்களை இரண்டாகப் பிரித்தால்தான், எல்லா வேலைகளையும் சரிவர கவனிக்க முடியும் என்பதில் சந்தேகம் இல்லை. ஏதோ நீலகிரி ஜில்லா, திருச்சி ஜில்லா வேண்டுமானால் சிறியதாக இருக்கலாம். மற்ற ஜில்லாக்களிலெல்லாம் அநேகமாக பெரியவைதான். சேலம், ராமனாதபுரம் இப்படிப்பட்ட ஜில்லாக்களெல்லாம் அவசியம் பிரிக்க வேண்டிய நிலைமையில் இருக்கின்றன. ஜில்லாக்களை சீக்கிரம் பிரிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னொரு விஷயம் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். தொழில் இலாகா மந்திரி இங்கு இல்லை, இருந்தால் நன்றாக இருந்திருக்கும். அவர்கள் இப்பொழுதுதான் சுற்றுப் பிரயாணத்திலிருந்து திரும்பி வந்தார்கள். அமெரிக்கா போய் வந்திருக்கிறார்கள். இந்த 5 வருஷங்களில் அவருடைய முயற்சியின் பேரிலும், அவருக்கு உதவியாக நிதி அமைச்சர் இருந்ததன் காரணமாகவும் நம்முடைய பொருளாதார நிலைமை உயர்ந்திருக்கிறது. நம்முடைய நாட்டில் பல தொழிற்சாலைகள் இந்த ஐந்து வருஷங்களில் ஏற்பட்டிருக்கின்றன. அதைப்பற்றி சந்தோஷப்படவேண்டும். இருந்தாலும், பம்பாய், டெல்லி, கல்கத்தா ஆகிய இடங்களை மொத்தத்தில் பார்த்தால், இங்கு குறைவாகத்தான் இருக்கிறது. கம்பெனி நம்பர் வேண்டுமானால் கூடுதலாக இருக்கலாம். மொத்த தொகையை வைத்துப் பார்த்தால் குறைவுதான். அதோடு 'பப்ளிக் ஸெக்டார் அவுட்லே'-ஐ எடுத்துப் பார்த்தால், ரொம்பக் குறைவுதான். 'பப்ளிக் ஸெக்டார் அவுட்லே'-ஐ பார்த்தால் பெரிய தொகையில் 3, 4 ஸ்டீல் பிளாண்டுகள் மற்ற இடங்களில் ஏற்பட்டிருக்கின்றன. டோடல் அவுட்லேயை அனுசரித்துத் தான் 'ரீஜனல் டெவலப்மெண்டு' ஏற்படும். அப்படிப்பார்த்தால் நம் ராஜ்யத்தில் 'அவுட்லே' மிகவும் குறைவாக இருக்கிறது. ஐந்து, பத்து வருஷங்களில் சென்னை ராஜ்யத்தில் முதல் மந்திரி காமராஜ் அவர்கள் முயற்சியினாலும், மந்திரிகள் சுப்பிரமணியம்,

வெங்கட்ராமன் அவர்கள் முயற்சியினலும் பல தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அதற்காக நான் அவர்களைப் பாராட்டுகிறேன். மந்திரி வெங்கட்ராமன் அவர்கள் சமீபத்தில் அயல் நாட்டிற்குப் போய் வந்திருக்கிறார்கள். இதற்கு முன்பும் அமெரிக்கா போய்வந்திருக்கிறார்கள். மந்திரி சுப்பிரமணியம் அவர்களும் வெளி நாடுகளுக்குப் போய் வந்திருக்கிறார்கள். இங்கிலாந்து, அமெரிக்காவுக்கெல்லாம் சென்று வந்திருக்கிறார்கள். அந்த அனுபவமெல்லாம் இங்கே பல தொழிற்சாலைகள் ஏற்படுவதற்கு உதவியாக இருந்தது. அதைப்பற்றி சந்தோஷப்படுகிறோம். அவர்களை அதற்காக பாராட்டுகிறேன். இருந்தாலும், மொத்த 'அவுட்லே'-ஐ எடுத்துக்கொண்டால் நம் ராஜ்யத்தில் அது குறைவு. அதை கூடுதலாக ஆக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

இது விஷயமாக நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சமீபத்தில் 30 லட்சம் 'ஸ்பிண்டில்ஸ்' டெக்ஸ்டைல் மில்ஸ் வரப் போகிறது இந்தியாவிலே. அதிலே 75,000 ஸ்பிண்டில்கள்தான் சென்னை ராஜ்யத்திற்கு என்று சொல்லப்படுகிறது. காரணம் என்னவென்று சொன்னல், ஏற்கனவே இங்கே 'ஸ்பிண்ட்லேஜ்' ஜாஸ்தி இருக்கிறது என்கிறார்கள். மற்ற பகுதியிலே ஸ்டீல் ப்ளாண்டு ஏற்படும்பொழுது, நம் பகுதிக்கு கொடுக்க மாட்டேன் என்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது எது முடியுமோ அதைக் கூட கொடுக்க முடியாது என்கிறார்கள். மற்ற பகுதிகளில் ஸ்பிண்டில் அதிகமாக இல்லை, அதனல் அங்கே ஜாஸ்தியாக கொடுக்கிறோம் என்று சொன்னல் என்ன அர்த்தம் என்று புரியவில்லை. என்னுடைய அபிப்பிராயம் 30 லட்சம் ஸ்பிண்டில்களில், குறைந்தது 10 லட்சம் ஸ்பிண்டில்கள் நம் ராஜ்யத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்.

நமது நிதி அமைச்சர் அவர்கள் சபைத் தலைவராக இருந்து கண்யமான முறையில் நடத்திக்கொண்டு போயிருக்கிறார்கள். அவர்கள் தொடர்ந்து இங்கே இருந்து அம்மாதிரி நடத்தினல் சந்தோஷமாக இருக்கும். அவர் மத்திய சர்க்காருக்குச் சென்றாலும், அங்கிருந்து நாட்டுக்கு சேவை செய்யக்கூடும். அதற்கு சந்தர்ப்பங்கள் நிறைய இருக்கின்றன. அங்கிருந்து அவர்கள் செய்யக்கூடிய வேலை பாக்கி இருக்கிறது என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். முப்பது லட்சம் ஸ்பிண்டில்களில் 10 லட்சம் ஸ்பிண்டில்கள் நம் நாட்டிற்கு அவசியம் இருக்கவேண்டும். அதோடு லூம்ஸும் கொஞ்சம்தான் இருக்கின்றன. அதையும் அதிகப்படுத்தவேண்டும். பத்து லட்சம் ஸ்பிண்டில்கள் கொடுக்க முடியாது என்பதற்கு அவர்கள் சொல்லுகிற காரணம் சரியல்ல என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இண்டஸ்டிரியல் டெவலப்மெண்டைப் பற்றி நான் சொன்னபொழுது, நம் ராஜ்யத்தில் இனிமேல் ஒரு இக்கட்டான நிலைமை வரப்போகிறது. இண்டஸ்டிரீஸ் வருவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றால், பவர் சப்ளைக்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஹைட்ரோ எலக்டிரிக் ஸ்கீம் எல்லாம் முடிந்து விட்டன. இனிமேல் தெர்மல் பிளாண்ட்ஸ்தான் வேண்டும். இங்கிலாந்து

14th December 1961] [Sri M. A. Muthiah Chettiar]

முதலிய அயல் நாடுகளில் பார்க்கும்பொழுது எங்கு பார்த்தாலும் தெர்மல் பிளாண்டு தான். பத்து, இருபது மைலுக்கு ஒரு தெர்மல் பிளாண்டு. தெர்மல் பிளாண்டுகள் இப்பொழுது அவசியம் ஏற்படுத்தவேண்டும். சென்னை, மதுரை, கோயம்புத்தூர் ஆகிய மூன்று இடங்களிலும் அவசியம் ஏற்படுத்தவேண்டும். நான்காவது திருச்சியில் ஏற்படுத்தலாம். மதுரையில் இப்பொழுது இருப்பது சிறிய பிளாண்டு. குறைந்தது 4 தெர்மல் பிளாண்டுகள் சீக்கிரம் ஏற்படுத்தினால்தான் இண்டஸ்ட்ரீஸுக்கு உதவியாக இருக்கும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

* SRI V. K. RAMASWAMI MUDALIYAR : Mr. Chairman, the Government have come forward asking further grants for the year 1961-62 under several heads. I want to speak only on three or four heads.

With regard to Demand XXII—Industries and Cinchona, I submit that almost all the industries are working at a loss. Some industries may be working at a profit. Even small-scale industries are not working satisfactorily. It must be possible for the Government to see that these industries are worked on a no-profit no-loss basis and finally see that they work on a profit. I submit that this should be looked into.

Regarding Demand XXV—Harijan Uplift, the Public Accounts Committee has been noticing many of the irregularities in this Department. So far we have not noticed any improvement. It should be possible for the Government to pull up this Department and tighten up the administration of this Department. I also request the Government to see whether it could not be brought under the control of the Board of Revenue so that some effective control could be exercised in the administration of the Department. The status of the Director of Harijan Welfare is on a par with that of the collectors. So the Collectors are not very responsive to the letters and reminders sent by him, with the result every year we find lot of audit objections under this Department. It is high time that the Government should take some serious notice and action. I once again request the Government to examine the feasibility of bringing this Department under the control of the Board of Revenue.

As regards Demand XXXV—Road Transport Schemes, they have asked for a sum of Rs. 44, 21,100. Many of the items, such as purchasing of tyres, oil, etc., could have been anticipated much earlier and there is no need for the Government to come up with such a heavy supplementary grant. Sir, even after the increased fleet strength, the position in the Transport has not improved and this shows the efficiency of the Department.

The next item is about Panchayat Unions and they have come forward with a demand for a large amount. A lot of wasteful expenditure in the panchayat administration and Panchayat Union Councils are made. Apart from the fact that a sum of Rs. 6 lakhs has been asked for the Panchayat Conferences, we find that 17 jeeps have been purchased for several Revenue Divisional Officers

[V. K. Ramaswami Mudaliyar] [14th December 1961

and about 120 jeeps for the Panchayat Unions. All these things should have been anticipated much earlier and some provision should have been made in the original budget and it need not be brought under the supplementary budget.

With reference to Demand VI—General Sales Tax and Other Taxes and Duties—Administration, I want to mention about the check posts. People are unnecessarily harassed there. During the last year, if my memory does not fail me, I think some top ranking C. I. D. Officer made a surprise check. Harassments should be stopped. Of course, I admit there should be effective check to avoid leakages as pointed out in Dr. Lokanathan's report. The check posts should not be converted into mamul posts but they should be tightened up.

12-30 p.m. Sir, I have been receiving a lot of complaints from a number of assessees that there has been inordinated lay in the disposal of Sales Tax cases and they were being unnecessarily harassed. These things should be properly looked into. While I agree that there should be an effective control and check, all leakages should be scrupulously avoided and we must try to plug all the loopholes as much as possible, still, I wish to reiterate that there should be a speedy disposal of these cases. I hope that the Government will look into all these matters mentioned by me just now.

Lastly, I wish to refer to one other matter. Under Irrigation also, there is a heavy demand. It is to the tune of Rs. 61,66,900 or so. It is rather heavy, except for the flood repairs for which a sum of about Rs. 2.40 lakhs or so has been provided. But, with regard to the other items, I should say that it is a pretty large amount. Here also, I wish to point out that the Department has not been functioning as efficiently as it was functioning once. I submit that the standard of the canals have not been kept up. They have silted up and the silt has not been removed, especially in the Grand Anicut. Whenever the Government come before the Legislature with supplementary grants, they should as far as possible try to minimise these items. That is all my submission, Sir.

SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்தத் துணை மானியக் கோரிக்கை மீது நான் விரிவான கருத்து எதுவும் தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லை என்றாலும், இந்த அறிக்கையில் கடன் உதவிகள் செய்வதற்காக இந்தத் துணை மானியக் கோரிக்கையில், அனுமதி கேட்டிருக்கிறார்கள். அண்மையில் ஏற்பட்ட வெள்ளத்தை ஒட்டி, திருச்சி, தஞ்சை ஜில்லாக்களில் பாதிக்கப்பட்டது போலவே, சேலம் ஜில்லாவிலும் பல பகுதிகள் பாதிக்கப்பட்டன, வெற்றிலைக் கொடிக்கால் பயிரிடுபவர்கள் பாதிக்கப்பட்டனர். அவர்களில் பலர் வெற்றிலைக் கொடிக்கால்களை குத்தகைக்கு எடுத்து நடத்துபவர்கள். நாமக்கல் தாலுகாவில், சேலம் ஜில்லாவில் சில பகுதிகளில், போதனூர், மோகனூர், முதலிய பகுதிகளில் குத்தகைக்கு எடுத்துக் கொடிக்கால்களை நடத்துபவர்களுக்கு கடன் உதவி அளிக்கப் படவில்லை என்று

14th December 1961] [Sri K. Anbazhagan]

தெரிவித்திருக்கிறார்கள். கடன் உதவி அளித்தால் அல்லாமல், அந்த வட்டாரத்தில் உள்ள மக்கள் தாங்கள் நடத்தும் தொழிலை, வெற்றிலைக் கொடிக்கால் தொழிலை தொடர்ந்து நடத்த முடியாது. துணை மானியக் கோரிக்கையில் பல இனங்களிலும், பஞ்சத்திற்காகவும், மற்ற இனங்களுக்கும் கடன் அளிக்கப்பட இந்த அறிக்கையில் பணம் அளிக்கக் கோரி இருந்தாலும், இவர்களுக்கு கடன் உதவி அளிக்கவில்லை என்பதை அமைச்சருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

போலீஸ் இலாகாவில், சென்னை நகரத்து போக்குவரத்துத் துறையில் பணி செய்பவர்கள் அதிகப் படுத்தப் பட்டு இருக்கிறார்கள். ஆனால், அந்த எண்ணிக்கை போதாது என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால், போக்குவரத்து மிக அதிகமாக வளரும் போது, போலீஸ் இலாகாவில் இன்னும் சற்று அதிகமான எண்ணிக்கை உடையவர்களாக இருந்தார்களேயானால், போக்குவரத்து துறை நல்ல முறையிலே கவனிக்கப்படும் என்பதைத் தெரிவிக்கிறேன்.

மற்றொன்று. இப்பொழுது பஞ்சாயத்து மாநாடு நடைபெற்றதற்காக கோரப் பட்டிருக்கிற தொகை 2,70,000 ரூபாய். அந்த அளவுக்கு பஞ்சாயத்து மாநாட்டை ஒட்டி செலவழித்திருக்கிறார்கள். ஆனால் பஞ்சாயத்து மாநாடு நடைபெற்றதைப் பற்றி, அங்கே நடைபெற்ற நிர்வாகத்தைப் பற்றியும், பெரும்பாலான பணிகள் கண்ட்ராக்டர்களிடம் விடப் பட்டதன் காரணமாக ஏராளமான செலவு ஏற்பட்டது என்று வந்துபோன உறுப்பினர்களும், மற்றவர்களும் தெரிவித்திருக்கிறார்கள். பொதுவாக கடன் தொகைகளை வைத்துக்கொண்டு கூட்டுறவு சொசைடிகள், வினியோகம் செய்யும் போதும், அதைச் செலவழித்துப் பல கடமைகளைச் செய்யும்போதும், கண்ட்ராக்டர்களிடம் விடுவதால், செலவு மிகுதியாகிறது. எனவே கூட்டுறவு சொசைடி மூலம், பஞ்சாயத்து யூனியன் மூலம் நடைபெறும் காரியங்களை, அளிக்கப் படும் தொகைகளை வைத்துக்கொண்டு, கண்ட்ராக்டர்களிடம் விடுவதற்குப்பதிலாக, அரசாங்கத்தின் நேரிடை நிர்வாகத்தில் நிறைவேற்ற முடியுமா என்பதை அமைச்சர் எண்ணிப்பார்க்கவேண்டும். குறிப்பாக சில கூட்டுறவு நிலையங்களுக்குத் தரப்பட்ட கடன் தொகையை வைத்து அவர்கள் பெற்றிருக்கும் லாபத்திலிருந்து அதைத் தேர்தல் காலத்தில் வினியோகிக்கிறார்கள். அப்படி 1957-ம் வருஷத் தேர்தல் காலத்தில் பார்க்கும்போது, ஏறத்தாழ 17,000 ரூபாயை பொதுப்பணத்திலிருந்து ஒரு தொகுதியில் எடுத்து வினியோகிக்கப் பட்டிருக்கிறது. இதை நான் குறிப்பிடுவதற்குக் காரணம், திருப்பெரும்புதூர் தாலூகா கூட்டுறவு வர்த்தக சங்கம் 57 தேர்தலில் 17,000 ரூபாய் பொதுப்பணத்தை செலவழித்தது பற்றி ஒரு புகார் குறிப்பேடு வந்ததன் காரணத்தினால், இந்தத் தேர்தல் காலத்தில் அம்மாதிரி கடன் வாங்கி எந்தச் சங்கமும் லாபத் தொகையை தவறான வழியில் செலவழிக்குமானால், அதைத் தவிர்க்க கடன் கொடுப்பதில் ஒரு கட்டுப்பாட்டை விதிக்கவோ அல்லது அப்படி வீணாக செலவழிக்கிற கூட்டுறவு சங்கங்களுக்கு கடன் தருவதில்லை என்றோ அரசாங்கம் ஒரு தீர்மானத்திற்கு வர

முன் வரவேண்டும், இந்தத் துணை மானியத் தொகை ஏராளமான கடன் தொகைகள் அளித்து இருப்பதால் வந்திருக்கும் காரணத்தினுல் என்று சொல்லி, என் உரையை முடிக்கிறேன்.

**SRI K. S. SUBRAMANIA GOUNDER :** தலைவர் அவர்களே, இந்தத் துணை மானியத்தின் மீது ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மானியத் தொகையிலே, சென்னை ராஜ்யக் கூட்டுறவு பாங்குகளுக்கு ரூ. 1-½ கோடி கடன் கொடுப்பது என்று அரசாங்கம் முன் வந்திருப்பதற்காக நான் அமைச்சர் அவையையும், குறிப்பக நிதி அமைச்சரையும் பாராட்டுகிறேன். மற்ற ராஜ்யங்களைவிட, நம் ராஜ்யம் கூட்டுறவு இயக்கத்தில் முன்னணியில் இருக்கிறது. என்றுலும், மத்திய சர்க்கார் திட்டங்களிலும் எல்லா ராஜ்யங்களுக்கும் ஒரேமாதிரிச் செய்வதால், தமிழ்நாடு மிக அதிகமாக முன்னேறியிருக்கும் அமைப்பையும், இங்கே இருக்கும் தேவைகளையும் அனுசரித்து செய்யாமல், அதை ஒட்டித்தான் ரிசர்வ் பாங்கு கொடுக்கும் பணம் போதாததாக இருக்கிறது. ரிசர்வ் பாங்கியிலிருந்து பணம் வேண்டுமென்றுல் தாமதத்திற்கும் வழி இருக்கிறது, சிக்கல்களும் இருக்கின்றன. அந்தக் காரணத்தினுல், உடனடியாக ரூ. 1-½ கோடி தேவை இருப்பதால், விவசாயிகளுக்கு திருப்தி ஏற்படக்கூடிய அளவில் அவர்களுடைய கடன் விண்ணப்பங்களை பூர்ணமாக சாங்ஷன் செய்ய முடியும் என்பதனுல் அரசாங்கம் அப்படி கொடுக்க முன் வந்திருக்கிறுர்கள். விவசாயிகளுக்கு அட்வான்ஸ் கொடுப்பது இதுதான் முதல்தடவை என்றுலும், அதுவும் மிக்க அவசியமானது. இம்மாதிரிப் பணம் ஒதுக்காவிட்டால், விவசாயம் ஸ்தம்பித்து விடும் என்ற நிலையில் இருக்கிறது. ஆகவே, தக்க காலத்தில் செய்த உதவி இது. அதற்காக சர்க்காரை பாராட்டுகிறேன்.

இன்னும் இரண்டொரு விஷயங்களை மட்டும் சொல்லி, அதற்கான பரிகாரமும் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். ரிசர்வ் பாங்க் கடன் வட்டி 2-½ சதவிகிதத்திற்குக் கொடுக்கிறுர்கள். அரசாங்கத்திலே லாண்ட் மார்ட்கேஜ் பாங்கு கடன் 3½ சதவிகிதம். சில சமயங்களில் வேறுசில காரியங்களுக்குக் கொடுக்கும்போது 3 சதவிகிதத்திற்கு அரசாங்கம் கொடுக்கிறுகள். ஆனுல், அதைக் கொடுக்கும்போது, பாங்க் வட்டி என்று சொல்கிறுர்கள். அப்படிச் சொல்லும்போது அது 4 சதவிகிதம் அல்லது 4½ சதவிகிதம் என்று ஆகிறது. அரசாங்கத்தில் ஸ்டேட் கூட்டுறவு பாங்க் மூலமாகக் கொடுக்கும்போது சரியான அளவுக்குக் கொடுக்கக் கஷ்டமாகப் போய்விடும். அதே சமயத்தில் கூட்டுறவு பாங்க் பொறுத்தவரை, அல்டிமேட் பாரோயருக்கு 6½ சதவிகிதம் இருக்கிறது. ஆகையினுல், கூடுமான வரையில் இந்த கடனை 3 சதவிகிதத்திற்குக் கொடுக்க வேண்டும், அல்லது 3½ சதவிகிதத்திற்காவது கொடுக்க வேண்டும்.

(Deputy Speaker in the Chair.)

மற்றென்று இந்தப் பணத்தை மார்ச்சு மாதத்திற்குள்ளாக கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் நிபந்தனை விதிக்கிறது. அதில் பல சிரமங்கள் இருக்கின்றன. ரிசர்வ் பாங்கியிலிருந்து

14th December 1961] [Sri K. S. Subramania Gounder]

பணம் எந்த அளவுக்கு வருகிறதோ அந்தப் பணத்தைக் கொடுப்பதில் சங்கடம் கிடையாது. இந்தக் கடன் கொடுப்பதை, மார்ச்சு என்று சொல்வதை தளர்த்தி, ஒரு ஆண்டில் கொடுக்கலாம் என்று அரசாங்கம் ஏற்பாடு செய்தால், பணத்தை உண்மையிலேயே விவசாயிகளுக்குக் கொடுக்கச் சௌகரியமாக இருக்கும். அந்த முறையில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்தப் பெரும் உதவியைத் தக்க நேரத்தில் செய்ததற்காக, அரசாங்கத்திற்கு நன்றியைத் தெரிவிக்கிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த துணை மான்யக் கோரிக்கையை துருவிப் பார்க்கையிலே அதிலே பல நல்ல அம்சங்கள் இருக்கின்றன. ஆனால் பலவற்றை முன்னமேயே செய்திருக்க முடியும் என்று தோன்றுகிறது. துணை மான்யக் கோரிக்கையை இப்பொழுது இரண்டாவது தடவையாக இந்த சபை முன் வைத்திருக்கிறார்கள். முதலில்லயே ஆகஸ்டு மாதத்திலே ஒரு துணை மான்யக் கோரிக்கை வந்தது, மறுபடியும் இப்பொழுது வந்திருக்கிறது. இப்படி மூன்று மாதத்திற்கு ஒரு முறை துணை மான்யக் கோரிக்கைகளைக் கொண்டு வந்தால் வரவு செலவுத் திட்டத்தின் முக்கியத்துவம் குறைந்து விடும் என்று பயப்பட வேண்டிய அளவிலே இருக்கிறது. சில முக்கியமான திட்டங்களை எடுத்துக் கொள்ளவேண்டுமென்ற காரணத்திற்காக துணை மான்யக் கோரிக்கை கொண்டுவருவது நல்லதுதான். அப்படி துணை மான்யக் கோரிக்கையை கொண்டு வருவது ஓரளவு நாட்டினுடைய வளர்ச்சியைக் காட்டுகிறது. ஆனால் அதன் மூலமாக அதிகாரிகள் இப்பொழுது இல்லாவிட்டாலும் பின்னால் துணை மான்யக் கோரிக்கையில் பல திட்டங்களுக்கான பணத்தை கேட்டுக்கொள்ளலாம் என்று நினைத்து வேலையில் அக்கறை செலுத்தாமல் இருப்பதற்கும் வாய்ப்பு ஏற்படும். ஆகையினால்தான் சிலவற்றை முன்னமேயே பார்த்து செய்திருக்கலாமென்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக காட்டு இலாகாவை எடுத்துக் கொண்டால் புதிதாக "எலக்டிரிபிகேஷன் ஆப் டிபார்ட்மென்டல் பில்டிங்ஸ்" என்று போட்டிருக்கிறார்கள். இதையும் முன்னரே யோசித்து, கட்டடம் கட்டினால் மின்சாரம் தேவை என்ற உணர்ச்சியோடு வரவு செலவுத் திட்டத்திலேயே கொண்டு வந்திருக்கலாம். அதோடு சில "ந்யூ ஸ்ர்விஸ் ஸ்கீம்களையும்" சேர்த்திருக்கிறார்கள். பூச்செடிகளை ஆராய்ச்சி செய்வதற்கு ஒரு திட்டம் போட்டிருக்கிறார்கள். அது புது ஸர்விஸ் என்று சொல்லப்படுகிறது. இவற்றையெல்லாம் சம்பந்தப்பட்ட இலாகாக்கள் யோசித்து வரவு செலவு திட்டத்திலேயே சேர்த்திருக்கலாம். வெள்ள நிவாரணத்திற்காக ஒரு திட்டத்தையும் சேர்த்திருக்கிறார்கள். இது துணை மான்யக் கோரிக்கையில் வரகளுக்கு துணை மான்யக் கோரிக்கை தேவையில்லை.

குறிப்பாக விற்பனைவரி இலாகாவை எடுத்துக்கொண்டால், அந்த இலாகாவிலுள்ள அதிகாரிகள் வியாபாரிகளை நடத்தும் முறை கேவலமாக இருக்கிறது. வியாபாரிகளுக்கு திருப்பிக் கொடுக்க வேண்டிய ரீபண்டு தொகையை

திருப்பிக் கொடுப்பதில்லை. வியாபாரிகளிடமிருந்து வசூல் செய்யும்பொழுது தொண்டையில் கயிற்றைப்போட்டு வாங்குகிற அதிகாரிகள், அதே நேரத்தில் அந்த வியாபாரிகளுக்கு ஏதாவது திருப்பிக் கொடுக்கவேண்டுமென்றால் பல ஆண்டுகள் கணக்கில் பேசாமல் இருக்கிறார்கள். இதனால் வியாபாரிகள் மிகவும் வேதனை அடைகிறார்கள். அவர்களுக்கு வரவேண்டிய ரீபண்டு பணமாக இருந்தால் ஒரு வருடம் அல்ல, நாலைந்து வருடங்களாகியும் பணம் திரும்பி வருவது கிடையாது. வாங்குவதில் எவ்வளவு ஜரூராக இருக்கிறார்களோ அதைப்போல திருப்பிக் கொடுப்பதிலும் ஜரூராக இருக்கவேண்டும். அப்படியல்லாமல் அதிகாரிகள் தவறாக நடந்துகொண்டால் அரசாங்கத்திற்குத்தான் கெட்ட பெயர் வரும். ஆகவே இந்த விஷயத்தில் சற்று கவனம் செலுத்தி சீக்கிரமாக அவர்களுக்கு கொடுக்க வேண்டிய ரீபண்ட் பணத்தை காலாகாலத்தில் கொடுப்பதற்கு வழிவகை செய்யவேண்டும்.

அடுத்தபடியாக ஹரிஜன நல இலாகாவை எடுத்துக் கொண்டால் நாம் கொடுக்கிற பணம் போதவே போதாது. ஆண்டு தோறும் அதற்கு துணைமான்யக் கோரிக்கையை கொண்டு வருகிறோம். அதற்குப் பதிலாக வரவு செலவுத் திட்டத்திலேயே தொகையை அதிகப்படுத்திவிட்டால் நலமாயிருக்கும். நாம் முதலில் கொடுக்கும் தொகை போதாது என்று தெரிந்தும்கூட ஏன் வரவு செலவு திட்டத்திலேயே தொகையை அதிகப்படுத்த கூடாது என்று கேட்கிறேன். இதனால் பள்ளியில் படிக்கும் மாணவர்கள் பாதிக்கப் படுகிறார்கள். ஆகவே, துணை மான்யக் கோரிக்கை வருவதற்கு முன்னமேயே வரவு செலவு திட்டத்திலேயே இதை அதிகரித்துக் கொடுக்கமுடியுமா என்பதை அரசாங்கம் யோசித்து அதற்கு ஆவன செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். பிற்பட்ட வகுப்பினருக்கும், ஹரிஜனங்களுக்கும் சேர்த்து ஒரே இலாக்காவிலே ஸ்காலர்ஷிப் வழங்குகிறார்கள். இதனால் மிகவும் கால தாமதம் ஏற்படுகிறது. இரண்டு வகுப்பைச் சேர்ந்தவர்களும் இப்பொழுது அதிகமாக படிக்க வந்துவிட்டார்கள். மாணவர்களின் எண்ணிக்கை ஏற ஏற வேலையும் ஏறுகிறது. அதனால் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே இந்த ஹரிஜன மாணவர்களின் ஸ்காலர்ஷிப்பையும், பின்தங்கிய வகுப்பினர் ஸ்காலர்ஷிப்பையும் பிரித்து ரெவின்யூ போர்டுக்கோ அல்லது வேறு இலாகாவிற்கோ கொடுத்தால் ஊழல்கள் இல்லாமல் நடப்பதற்கு வழி ஏற்படும். இதேபோன்று ஸ்காலர்ஷிப்புகள் பல மாவட்டங்களிலே கொடுக்கப்படுகின்றன. தஞ்சை, திருச்சி முதலிய நகரங்களிலே இப்பொழுது ஆர்ட்ஸ் கல்லூரிகளை ஏற்படுத்தியிருக்கிறோம். என்ஜினியரிங் கல்லூரி, மெடிக்கல் கல்லூரி இவைகளுக்குத்தான் இப்பொழுது சென்னைக்கு வரவேண்டியிருக்கிறது. ஆகவே கூடியவரையில் அந்தந்த மாவட்டங்களிலேயே இந்த மாணவர்களை சேர்த்துவிட்டால் இன்னும் 4, 5 மாணவர்களுக்கு சென்னையிலே ரெஸிடென்ஷியல் ஸ்காலர்ஷிப்புக்கள் வழங்குவதற்கு வசதியாயிருக்கும். இந்த ஒரு முறையையும் கவனித்தால் நல்லது. இப்பொழுது இந்தத் தொகை 50, 60

அல்லது 70 மார்க்குகள் வாங்குபவர்களுக்குத்தான் கொடுக்கப் படுகிறது. எவ்வளவு அதிகமாக கொடுக்கமுடியுமோ அதைக் கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சி செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக, பஞ்சாயத்து யூனியன் கணக்குகளை பரிசீலனை செய்வதற்காக "குவார்டர்லி செக்கிங்" என்ற அடிப்படையிலே சில ஆபீசர்களை போட்டிருக்கிறார்கள். நான் பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் அங்கத்தினராக இருப்பதால் பல துறைகளிலே அகௌண்டண்ட் ஜெனரல் ஆபீசுக்கும் மாவட்ட அதிகாரிகளுக்கும் ரெகன்ஸிலியேஷன் ஏற்படுவது கிடையாது என்பது எனக்குத் தெரியும். ஆகவே இன்னும் சற்று கவனம் செலுத்தி மாவட்ட கணக்குகளாக இருந்தாலும் சரி, பஞ்சாயத்து யூனியன் கணக்குளாக இருந்தாலும் சரி, அப்போதைக்கப்போது சரி பார்த்தால் தான் ஓரளவுக்கு இந்த ஊழல்களை தவிர்க்க முடியும். எனக்குத் தெரியும், எத்தனையோ பஞ்சாயத்து தலைவர்கள் கணக்கு கொடுக்காமல், அவர்கள் மீது ஒரு நடவடிக்கையும் எடுக்காதவாறு பார்த்துக் கொண்டு வருகிறார்கள். மக்களுடைய பணத்தை தவறான வழியிலே செலவழிப்பதை யாரும் அனுமதிக்க முடியாது. ஆகவே மாவட்டங்களிலேயும் இன்னும் எந்தெந்த துறைகளிலே இந்த முறையை கொண்டு வரலாமோ அதைக் கொண்டுவரும்படி கேட்டுக்கொண்டு இந்த துணை மான்யக் கோரிக்கையை ஆதரிக்கிறேன்.

**SRI G. ANNAMALAI MUTHURAJA :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமது நிதி அமைச்சரவர்கள் கொண்டுவந்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அந்தநல்லூர் தொகுதியிலே நிறைய வாய்க்கால்கள் திறக்கப்பட்டு இப்பொழுது சாகுபடி அதிகமாக இருக்கிறது. இந்தத் தொகுதியிலுள்ள விவசாயிகளுக்கு உரம் கிடைக்காததினால் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். சல்பேட் உரமானது சம்பா சாகுபடிக்குக் கூட சரியானபடி கிடைக்காமல் இருக்கிறது. ஆனால் யூரியா என்ற உரம் சில ஸ்டோர்களிலே நிறைய ஸ்டாக்கு இருக்கிறது. அந்த யூரியா உரமானது வாழை, கரும்பு சாகுபடிக்கு மிகவும் ஏற்றதாக இருக்கிறது. ஸ்டாக்கு இருக்கக்கூடிய உரங்களையாவது கொடுக்கவேண்டுமென்று கேட்டால் சர்க்காரிலிருந்து உத்தரவு வந்திருக்கிறது, சாகுபடிக்குத்தான் கொடுக்கமுடியும் என்று தடை சொல்லுகிறார்கள். ஆகவே இந்த யூரியா உரத்தை மற்ற சாகுபடிக்கும் கொடுக்கவேண்டும். கரும்பு சாகுபடிக்கு இது மிகவும் தேவையாக இருக்கிறது. ஆகவே அதற்குக் கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். அடுத்தபடியாக விவசாய இலாகாவிலே வேலை பார்த்து வந்த சில மேஸ்திரிகளுக்கு இப்பொழுது வேலையில்லை என்று நோட்டீஸ் கொடுத்திருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மாதிரி நோட்டீஸ் கொடுத்து வேலையிலிருந்து நீக்கப்படுகிறவர்களுக்கு பஞ்சாயத்திலாவது வேலை கொடுக்க வேண்டுமென்று உத்தரவு போடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

என்னுடைய தொகுதியிலே கம்பரசன்பட்டி கிராமமானது காவேரிக்கரை ஓரமாக இருக்கிறது. அதற்குப் பக்கத்திலுள்ள இடங்களிலே காவேரித் தண்ணீர் வந்து அதனால் சேதம் ஏற்படுகிறது. அதற்காக பக்கத்திலே காம்பவுண்டு சுவர் கட்டியிருக்கிறார்கள். அதேமாதிரி இந்த ஊரிலேயும் ஒரு காம்பவுண்டு சுவர் கட்டி ஜனங்களுக்கு ஆபத்தில்லாமல் இருக்கும்படி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: The Hon. Minister will now reply.

Sri V. K. KOTHANDARAMAN rose . . . .

DEPUTY SPEAKER: The Hon. Minister has to reply and I have to apply the guillotine at 1 p.m.

THE HON. SRI C. SUBRAMANIAM: உதவி சபாநாயகர் அவர்களே, இந்த உபமான்யக் கோரிக்கையைப்பற்றி பல அங்கத்தினர்கள் பேசும்பொழுது இதை கூடியவரையிலும் குறைத்துக்கொள்ள வேண்டுமென்று குறிப்பிட்டார்கள். இதைப் பற்றி நாம் அடிக்கடி விவாதம் செய்திருக்கிறோம். அதிலும் முக்கியமான திட்டங்களை வேகமாக நிறைவேற்ற வேண்டும் என்கிற முறையிலே முயற்சி எடுத்து வரும்பொழுது, ஆரம்ப காலத்திலே ஓரளவுக்கு நமக்கு இவ்வளவுதான் செலவழிக்கவேண்டுமென்று, நாம் அகில இந்திய ரீதியிலே பேசி முடிவு எடுத்து பட்ஜெட்டை தயார் செய்கிறோம். ஆனால் திட்டங்களை நிறைவேற்றுகிற நேரத்திலே இன்னும் அதிகமான அளவுக்கு நிறைவேற்றுவதற்காக முயற்சி எடுக்கிறோம். சென்ற ஐந்தாண்டுத் திட்டத்திலும் இம்மாதிரித்தான் செய்து வந்திருக்கிறோம். அதன் காரணமாகத்தான் 152 கோடி ரூபாய்க்கு பதிலாக 187½ கோடி ரூபாய் செலவழிக்க முடிந்தது. இந்த ஆண்டிலும் சுமார் 47 கோடி ரூபாய்க்கு பதிலாக 50 கோடி ரூபாய் செலவழிக்கப் போகிறோம் என்று சொன்னால், அந்த அளவுக்கு நாம் புதிய திட்டங்களை அதிகமாக எடுத்துக் கொண்டிருக்கிறோம். முக்கியமாக நீர்ப்பாசனம் சம்பந்தமாக வசதி செய்ய வேண்டும் என்பதற்காக பாம்பிக்குளத் திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டது. அதற்கு என்று 3½ கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. இருந்தபோதிலும் திட்ட அளவில் இல்லாவிட்டாலும் வேலை அளவில் அதிகப்படியாக செலவு செய்ய வேண்டியதாக ஆயிற்று. இப்படி புதிய புதிய திட்டங்களை எடுத்து நடத்தும்போது வேலை அளவில் அதிகப்படியாக செலவு செய்யவேண்டியதாக ஏற்படுகிறது. விரிவாக வேலை செய்வதற்கு அதிகப்படியான பணம் தேவையாக இருக்கிறது. திட்டம் போடும்போது அந்தச் செலவை எதிர்பார்க்க முடியவில்லை. பின்னால் உபரி மானியம் கேட்க வேண்டியதாக இருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் பேசும்போது பல தொழில்கள் நஷ்டத்தில் வேலை செய்கிறது என்பதைப் பற்றி சொன்னார். சர்க்கார் ஏற்று நடத்தக்கூடிய சிறு கைத் தொழில்களிலும் மற்ற முன்னேற்ற தொழில்களிலும் நஷ்டம் ஏற்படுகிறது என்றும் சொன்னார். அதை திருத்தி அமைக்கும்

14th December 1961] [Sri C. Subramaniam]

முறையில் தொழில்களை அமைப்பதற்கு முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறேம். அவைகளில் உடனடியாக லாபம் வரும் என்று எதிர் பார்க்க முடியாது.

பலர் ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டைப்பற்றி பேசினர் கள். இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் இருந்ததை விட இப்பொழுது எவ்வளவோ தேவலை என்று சொல்லலாம். இதற்கு முன் எவ்வளவோ குறைகள் இருந்தன. அவைகள் எல்லாம் இப் பொழுது தீர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. மூன்று மாதங் களுக்கு ஒரு தடவை அதற்குக் கொடுக்கக்கூடிய பணத்தை தணிக்கை செய்யச் சொல்லப்பட்டிருக்கிறது. ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டில் இப்பொழுது அதிகப்படியான கவனம் செலுத் தப்பட்டு வருகிறது. இன்றைக்கு ஓரளவு அதிகமாகவே உதவிச் சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. இன்னும் மற்ற பணிகளும் அதிகமாகவே செய்யப்பட்டுதான் வருகிறது. ஓரளவு அதில் இருக்கும் குறைகளும் தீர்க்கப்பட்டுதான் வருகிறது. அநேகம் திருத்தங்களும் செய்யப்பட்டிருக்கின்றன. இன்னும் எவ்வளவு திருத்தங்கள் செய்ய முடியுமோ அவ்வளவு திருத்தங்களும் செய் யப்படும். அப்படி திருத்தங்கள் செய்து அது நல்ல முறையில் நடைபெறும் என்று எதிர்பார்க்கிறேன். முக்கியமாக ஏழை ஹரிஜன மக்களுக்குக் கிடைக்க வேண்டிய உதவி கிடைக்க வேண்டும். எந்த விதமான நிர்வாகக் குறைகளும் இல்லாமலும் அது நடக்கவேண்டும். எந்த விதமான ஊழல்களும் அதில் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது நம்முடைய முக்கிய மான கடமை. அதனல் அதில் அதிகப்படியான கவனம் செலுத் தப்பட்டு வருகிறது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அதேமாதிரி விற்பனை வரியைப்பற்றி சொன்னர்கள். அதிலுள்ள செக் போஸ்டுகளைப்பற்றியெல்லாம் சொன்னர்கள். சில செக் போஸ்ட்களிலிருந்து புகார்கள் வந்தன. அந்த செக் போஸ்ட்களில் இருந்தவர்களை ஸஸ்பெண்ட் செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அவர்களை சஸ்பெண்ட் செய்து அதுவும் இப்பொழுது விசாரணையில் இருக்கிறது. அதில் குற்றம் செய்திருக் கிறார்கள் என்று தெரியவந்தால் அவர்களுக்கு தக்க தண்டனை கொடுக்கப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்படி அடிக்கடி புகார்கள் வராமல் இருப்பதற்கு செக் போஸ்டு களை தணிக்கை செய்வதற்கு ஏற்பாடு செய்துகொண்டு வருகிறேம். இதற்கு என்று சி.ஐ.டி. ஆபீசர்களை நியமித்து செக் போஸ்ட்களை தணிக்கை செய்யவேண்டும் என்று சொல்லி இருக்கிறேம்.

கனம் அன்பழகன் பேசும்போது நாமக்கல், பாண்டமங்கலம் முதலிய இடங்களிலுள்ள கொடிக்கால்கள் வெள்ளத்தால் பாதிக்கப் பட்டிருக்கிறது என்றும் அதனல் பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவா ரணம் அளிக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார். வெள்ளத்தால் அந்த இடங்களில் பாதிக்கப்பட்டிருக்கிறர்கள் என்ற செய்தியை இப்பொழுதுதான் முதன்முதலாக நான் கேள்விப்படுகிறேன். சாதா ரணமாக தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில்தான் வெள்ளத்தால்

பாதிக்கப்பட்டார்கள் என்று கேள்விப்பட்டேன். சேலம் ஜில்லாவில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டார்கள் என்று இப்பொழுதுதான் முதன் முதலாகக் கேள்விப்படுகிறேன். எங்களுக்கு வந்த செய்திகளில் நாமக்கல்லிலும், பாண்டமங்கலத்திலும் ல்வள்ளத்தால் பாதிக்கப்பட்டார்கள் என்று தகவல் இதுவரையிலும் வரவே இல்லை. இப்பொழுது அன்பழகன் அவர்கள் சொன்னதை வைத்துக் கொண்டு, அவர் சொன்னது பேப்பரில் வருவதை பார்த்து இனிமேல் அவர்கள் கேட்பார்கள் என்று நினைக்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக கே. எஸ். சுப்ரமணிய கௌண்டர் அவர்கள் பேசும்போது 1½ கோடி ரூபாய் கடன் கொடுத்திருப்பதைப்பற்றி குறிப்பிட்டார். அதை மறுபடியும் திருப்பி வாங்கக்கூடாது என்றும் குறிப்பிட்டார். இந்தப் பணம் சாதாரணமாக ரிசர்வ் பாங்கியிலிருந்து கடனாக வாங்கப்பட்டது. அங்கிருந்து பணம் வருவதற்குள் அக்காமடேட் பண்ணுவதற்கு என்று வாங்கி கொடுக்கப்பட்டது. அதைத் திருப்பி வாங்கக்கூடாது என்று சொல்லுவது சரியல்ல. இங்கு இருக்கக்கூடிய கஜானாவிலிருந்து எடுத்துக் கொடுக்க முடியவில்லை என்பதற்காக அவர்களிடமிருந்து வாங்கிக் கொடுத்த பணம் அது. ரிசர்வ் பாங்கியில் வாங்கிய பணத்தை திருப்பிக் கொடுத்துவிட வேண்டியது தான். தாற்காலிகமாகத்தான் அதை வாங்கி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அதைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

உப மானியக் கோரிக்கை எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் கொண்டு வரப்படுகிறது. பட்ஜெட்டில் சேர்க்கமுடியாமல் ஏதாவது உபரியாக செலவு செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதைச் செலவு செய்து விட்டு உபரி மானியக் கோரிக்கையாக்க் கொண்டு வரப்படுகிறது. கூடிய வரையில் பட்ஜெட்டிலிருந்தே செலவு செய்ய முயற்சி எடுத்துக்கொள்ளப்படுகிறது. எதிர்பார்த்ததற்கு மேல் செலவு ஏற்படக்கூடிய காலத்தில்தான் உபரி மானியக் கோரிக்கை கேட்கப்படுகிறது. ஆகையால் இந்த உபரி மானியக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

## IV.—VOTING ON DEMANDS FOR FURTHER GRANTS DURING THE YEAR 1961–62.

### *Demand I—Land Revenue.*

DEPUTY SPEAKER : The Hon. Minister can move the Demands.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a further sum not exceeding Rs. 10,30,000 under Demand I—Land Revenue."

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a further sum not exceeding Rs. 10,30,000 under Demand I—Land Revenue."

The Demand was put and carried and the Grant was made.